ரும், அடியார்கள்செய்த குற்றம் தன் ஆசிரியனைப்பற்றும், சற்
கன்டுபோலும, மொழியையுடைய மஙகையாகள் செய்தபாவ
ம புருடர்களுக்காகும. எ - று. (௭௩)

நற்குண முடையவேகனை நயந்துசேவித்த லொ
ன்று,பொறபுடைமகளிரோடு பொருந்தியே வாழ்தலொ
ன்று, பற்பலரோடுநன்னூல பகரதவா சித்தலொன்று,
சொற்பெறு மிவைமூன்று மிமமையிற் சுவர்க்கந்தா
னே.

(இ-ள்.) நல்லகுணமுடைய ராஜர்களை விரும்பி தரிசித்த
லும், அழகுடைய ஸ்ரீகளோடுகூடிவாழ்தலும், கலவிமான்களா
ன நல்லாசிரியனையடுத்துத தன்னையொத்த மாணுக்கர் பலரோ
டிட. நலலநூலகளைககேட்டுச் சநதேகமறப்பயின்று கற்றுக்கொ
ள்ளுதலுமாகிய இந்த மூன்றுகாரியஙகளும, இகத்தில அனுப
விககததக்க சுவர்ககபோகங்களாம. எ - று. (௭௪)

நிட்டையிலே யிருந்துமனத துறவடைந்த பெரி
யோர்க ணிமலன்றாளைக், கிட்டையிலே தொடுத்துமுத
தி பெறுமளவும் பெரியசுகங் கிடைக்குங்காம, வெட்
டையிலே மதிமயங்கிச் சிறுவருக்கு மணம்பேசி விரும்
பித்தாலி, கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே
கிடத்துமட்டுங கவலைதானே.

(இ-ள்.) சதாநிட்டைபுரிந்து பற்றுநீங்கி, மனதின்கண் து
றவடைநத பெரியோர்களெலலாம் பரமபதியின் பததைத்து
திககக கிடைத்ததுமுதல், மோட்சததை அடையுமவரையில,
பெரிதான ஆனந்ததைத அடைவாாகள். கன்னியர்கள காம
மெனனும், வெபபததிலே புததிமயங்கிக் கிடப்பவர்களெல்லா
ம் சிறுமியாக்கு விவாகமுறைபேசி விருப்பததோடு தாலிகட்டு
வது முதல சுடுகாட்டிலடுக்கிய கட்டைகளின் நடுமததியில்
கொண்டுபோய் வைக்கும், வரையில, துன்பமே யனுபவிப்பா
ர்கள். எ - று. (௭௫)

## தலைவன்வருந்தல்.

அன்னம் பழித்த நடையாளைப்பழித்த விழியமுதம் பழித்தமொழிகள். பொன்னை வெறுத்தமுலை சனைய கறுத்தகுழல் புன்னைசிறுத்த விடைப்பெண், ணொனெஞ் சுருக்கவவ டனெனஞ்சுசற்றகலே யெனவென்றுரைப் பகினினுனை, சின்னஞ் சிறுக்கியவள் விலைங்கமிட்டபடி தெய்வங்களுங் கபயமே.

(இ-ள்.) அன்னத்தை இகழ்ந்த நடையையும், விஷத்தை நிந்தித்த கண்களையும், அமிர்தத்தைப் பழித்த சொற்களையும், பொன்போலும் தேமற்படர்ந்த பருத்தமுலைகளையும், கருநிறமாக இருண்ட கூந்தலினையும், கண்டவர்கள் அதிநுட்பமென்று மதிக்கும்படி மிகவுஞ்சிறுத்த இடையினையுமுடைய பெண்ணானவள், எனதுமனத்தை உருக்க அவள் தனெஞ்சிற் கறுக்கொண்ட சாதுர்யவல்லபத்தை இனி நானென்னென்று சொல்லுவேன், அச்சிறுக்கியால் நேரிட்டவில்லங்கங்களுக்குத் தெய்வத்தை நோக்கி முறையிடுவதன்றி யென்னாலசெய்யத் தக்கதியாது. எ - று. (௭௯)

## எழுசீரடி யாசிரிய விருத்தம்.

ஆவீன மழைபொழிய இல்லம்வீழ அகத்தடியாள் மெய்நோவ அடிமைசாவ, மாவீரமபுலாவதென விதைகொண்டோட வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ள, கோவேந்தருழுதுண்ட கடமைகேட்கக் குருக்கள்வந்து தட்சணைக்குக் குறுக்கேநிற்கப், பாவாணர் கவிபாடிப் பரிசுகேட்கப் பாவிமகன் படுந்துயரம் பார்க்கொணுதே.

(இ-ள்.) பசுகன்றைப்பெற மழைவிடாதுபெய்ய, வீடு இடிந்து விழ, வீட்டுக்குரியமனைவி கொப்பவேதனைப்பட வேலையாள் இறக்க, ஈரங்காய்ந்துவிடுகின்றதென்று விதைக்க விதை

கொண்டு ஓட, அந்தவழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ள, அச்சமயத்தில், வேளாண்மைசெய்து சாப்பிட்டபூமிகளின் தீர வையை, தலைமையான அரசர்கேட்க, அதுகாலை குருக்களான வரும் குருசகேகினறு தட்சணைகேட்க, கவிகளைப்பாடி வித்து வான்கள் சன்மானஞ்செய்யும்படி வினவ, பாவிமகன் அடையு மதுன்பம் பார்க்கச்சகிக்காது. எ - று. (எஎ)

## அறுசீரடி யாசிரிய விருத்தம்.

தாய்ப்பகை பிறர்நட்பாகில் தந்தையும் ருணவாளனாகி ல், வாய்ப்பகை மனைவியாரு மாவழகுற்றபோது, பேய்ப்ப கை பிள்ளைதானும் பெருமைநூல் கல்லாவிட்டால், சே ய்ப்பகை யொருவர்க்கா மென்றனர் தெளிந்த நூலோர்

(இ-ள்.) பிறருக்கு அனுகூலமாகவும் தனக்குப் பகையா கவுமிருக்கின்ற மாதாவும், அதிகக்கடன்பட்ட பிதாவும், மிகுந் த அழகுள்ளவளாய (தனக்குவந்த) மனைவியும், பெருமையான சாஸ்திரங்களைக் கற்றுக்கொள்ளாதபிள்ளையும், ஒருவனுக்குக்கி டைக்குமாகில், அவன் யாவருக்கும் பகையுடையவனென்றே நன்றாய அறிந்த கிரந்தகர்த்தாக்கள் சொல்வார்கள். எ - று. ()

நிலைதளர்ந்திட்டபோது நீணிலத்துறவுமில்லை
சலமிருந்தகன்றபோது தாமரைக்கருக்கனுற்றம்
பல்வனமெரியும்போது பற்றுதீக்குறவாங்காற்று
மெலிவதுவிளக்கேயாகில் மீண்டுமக்காற்றேகூற்றாய

(இ-ள்.) நீர் நிறைந்த தடாகத்திலுள்ள தாமரைப் புஷ்ப த்திற்கு அக்காலத்தில் சிநேகனாயிருந்த சூரியனே, நீர்வற்றி யகாலத்தில் அத்தாமரைக்குச் சத்துருவாய் நாசஞ்செய்வான் அடர்ந்த பெருங்காடுகள் தீப்பற்றியெரியும்போது அப்பெரு நெருப்புக்கு வாயுவாகிய காற்றுதவியாக நிற்கும். அவ்விதநெ ருப்பு தன்னளவிற் சுருங்கி யொருதீபத்தளவாய் நின்றபோது அக்காற்றே அத்தீபத்திற்கு யமனாகும். அதுபோல, செல்வம் நிறைந்தகாலத்தில் நெருங்கிய உறவினராயிருந்தவர்களும், அ து தவறியகாலத்தில். பந்துத்துவநீங்கிய பகைவராவார்கள்.

மடுத்தபா வாணர்தக்கோர் மறையவரிரப்போர்க்
கெல்லாங், கொடுத்துயார் வறுமையுற்றார் கொடாதுவா
ழ்ந்தவரார்மண்மேல், எடுத்துநாடுண்ட நீருமெடாதகா
ட்டகத்து நீரு, மடுத்தகோடையிலே வற்றியல்லதிற்
பெருகுந்தானே.

(இ-ள்.) நெருங்கிய வித்வான்கள், மேலானவர்கள், வே
தியர்கள், யாசிப்போர்கள், இவர்களுக்குக் கொடுத்ததினாலே யா
ர் தரித்திரத்தை யடைந்தார்கள். கொடாமல் பூமிமேலிருந்து
யார் வாழ்ந்தார்கள் நாட்டில் யாவரும் எடுத்துண்ணத்தக்க
தடாகஜலமும், ஒருவரும் எடுத்துண்ணாத காட்டினிடத்துள்ள
கரிநீரும், பொருந்திய கோடைகாலத்தில் வற்றியும் (மாரி கா
லத்தில்) ஜலம் நிறைந்தும்பெருகுமல்லவா. எ-று. (௮௰)

உணங்கியொருகால் முடமாகி யொருகண்ணின்றிச்
செவியிழந்து, வணங்குநெடுவாலறுபட்டு மண்ணுமுது
கில் வயிறொட்டி, அணங்குநலிய மூப்பெய்தி யகலவா
யோடு கழுத்தேந்திச், சுணங்கண் முடுவல்பின்சென்றால்
யாரைக்காமன் றுயர்செய்யான்.

(இ-ள்) வாட்டமுற்றும் ஒருகால் முடமாகியும், ஒருகண்
குருடடைந்தும், காதறுப்புண்டும், நீண்டவாலும் அறுபட்
டும், உணவின்றி வயிறுமுதுகோடொட்டியும், அழகுகெட்டு
முதுமை வாய்ந்தும் அகன்றவாயினையுடைய கலவடையைக்
கழுத்திலமாட்டிக்கொண்டும், திரியும் ஆண்நாயானது; ஒரு
பெண்ணாயின்பின் காமத்தாலோடித்திரியுமாகில், மற்றவ
ர்களை மன்மதன் துன்பஞ்செய்யான். எ-று. (௮௧)

கன்மனப்பாப்பார் தங்களைப்படைத்துக் காகந்
தை யென்செயப்படைத்தாய், துன்மதிவணிகர் தங்களை
ப்படைத்துச் சோரனையென்செயப்படைத்தாய், வன்ம
னவடிகர் தங்களைப்படைத்து வானரமென்செயப் படை
த்தாய், நன்மனதோறும் பெண்களைப்படைத்து நமனை
யென்செயப் படைத்தனையே.

(இ-ள்.) (ஓ நான்முகனே?) கருங்கல்லைப்போன்ற நெஞ்சத்தையுடைய பிராமணரைப்படைத்திருந்தும் காகத்தையும், துற்புத்தியுள்ள வணிகரைப் படைத்திருந்தும் இருடர்களையும், வலிய நெஞ்சத்தையுடைய வடுகரைப்படைத்திருந்தும் எமனையும், மாறுசயாதுகாரணத்துக்காக படைப்பித்தாய். எ - று. ()

உண்ணல்பூச்சூடனெஞ் சுவத்தலொப்பனை
பண்ணலெல்லாமவர் பார்க்கவேயன்றோ
யண்ணலதன்பிரிவினை யறிந்துந்தோழிநீ
மண்ணவந்தனையிது மடமையாகுமால்.

(இ-ள்.) எனதுயிர்ப்பாங்கியே? உலகத்தில் கற்பிற்சிறந்த பெண்கள், மதுரமான ஆகாரங்களை யுட்கொள்ளுதலும், பரிமளமிகுந்த புட்பங்களைமுடித்தலும், மனமகிழ்ச்சி முகமலரப்பிசுகினோடிருத்தலும், மற்றும் பலவிதமான திவ்யவஸ்திராபரணங்களால் தன்னை யலங்கரித்துக் கொள்ளுதலுமாகிய இவைகளெல்லாம், தத்தங்கணவர்களைகண்டு களிப்பதற்காகவே யல்லவோ? (அவ்வாறிருக்க) பெருமையிற்சிறந்த வென்னுடைய நாயகன் தற்சமயம் என்னைவிட்டுப் பிரிந்திருப்பதனையுந் தெரிந்திருந்தும், என்னை யலங்காரஞ்செய்வதற்காக, நீவந்தது உனதறியாமையினாலல்லவோ? எ - று. (௩௧)

கோளரி யடர்ந்தகாட்டிற் குறங்கில்வைத் தமுத
மூட்டித், தோளினிற் றூக்கிவைத்துச் சுமந்துபோற்றவள
ர்த்த, ஆளனைக் கிணற்றிற்றள்ளி யழகிலாமுடவற்சேர்ந்
தாள், காளமேக கண்ணினாரைக் கனவிலும் நம்பொணா
தே.

(இ-ள்.) வெவ்விய சிங்கங்கள் வாழுங் கானகத்தில், துடையில் விருத்தியன்னமூட்டித, தோளிற்றூக்கிச்சுமந்து அன்பாகவளர்த்துவந்த புருடனையும் கிணற்றிற்றள்ளி, ஓரழகில்லாத முடவனை ஒருத்திகூடினாள். ஆதலால் விடத்துக்கொப்பான கண்ணுடையவரை கனவிலும் நம்பத்தகாது. எ - று.

சேய்கொண்டா ருங்கமலச் செம்மலுடனே யர
வப், பாய்கொண்டா ரும்பணியும் பட்டீச் சுரத்தானே,
நோய்கொண்டா லுங்கொள்ளலாம் நூறுவய தாமளவும்,
பேய்கொண்டா லுங்கொள்ளலாம் பெண்கொள்ள லாகா

(இ-ள்.) சிவந்த நிறத்தைக்கொண்டு விளங்குந்தாமரைமல
ரிலுள்ள பிரமதேவனும், ஆதிசேடனைப் பாயலாகக்கொண்ட
மகாவிஷ்ணுவும், வணங்கித்துதிக்கும்படியாகத், திருப்பட்டீச்
சுரத்தலத்தில் எழுந்தருளிய சிவபெருமானே (ஒருவன்) நூறு
வயதளவும் வியாதியையும் கொள்ளலாம், பேயையுங் கொள்ள
லாம், பெண்களைக்கொள்ளல் ஆகாது. எ - று. (௮௫)

கஸ்தூரிமுதலிய
வாசனைவஸ்துக்களை விற்பனைசெய்பவர்,
ஒருவேடன் குடியிருப்பிற்சென்று,
தங்கள் வர்த்தகத்தைக்
காட்டியபோது
நடந்தசம்பாஷணை.

நானமென்பது மணங்கமழ் பொருளதுநாவி லுண்
பதோவொரோ, ஊனுணங்கு வேய்மடந்தை யரணிவ
தாமுயா முலைத்தலைமேசாடில், ஆனதங்கது பூசிணை வி
ங்கிய தமையுமோவெனக்கேட்கக், கானவேட்டுவச் சே
ரிவிட்டகன் றனாகுடிகமழ் விலைவாணர்.

(இ-ள்.) (வர்த்தகர்) நானமென்பது வாசனைகமழும் பொ
ருளென்ன (வேடர்) நாவினால் சுவைத்துச் சாப்பிடத்தக்க ப
தார்த்தமோ சொல்லென்ன, (வர்த்தகன்) ஊனுண்பவனே!
ஸ்திரீகள் விசாலித்த முலையினிடத்து அணிந்துகொள்ளும் வா
சனைத்திரவியம் என்ன, (வேடர்) அதைப்பூசில முலைவீக்கம்
அமுங்கிவிடுமோ? வென்ன. (வர்த்தகன்) அக்கானகத்திலுள்ள
வேடர் குடியிருப்பைவிட்டு நீங்கினார். எ - று. (௮௬)

கொண்டுவிண்படர் கருடன்வாய்கொடுவரிநாகம்
விண்டநாகத்தின்வாயினில் வெருண்டவன்றேரை
மண்டுதேரையின் வாயினிலகப்படுவண்டு
பண்டுதேனுகரின்பமேமானிடவின்பம்.

(இ-ள்) கருடன்வாயினிடத்தகப்பட்டு ஆகாயத்திற்கொண்டுசெல்லும் நீண்டநாகமும், அந்நாகத்தின்வாயில அகப்பட்ட தேரையும், அத்தேரையின் வாயிலகப்பட்ட வண்டும, அத்தகையவண்டானது மதுவையுண்ணும இன்பத்திற கொப்பேயாகும், இவ்வுலகத்திலுள்ள மனிதர்களனுபவிக்கும் இன்பங்கள்.

கற்பூரப்பாத்திகட்டிக் கஸ்தூரியெருப் போட்டுக்க
மழ்நீர்பாயச்சிப், பொற்பூரவுள்ளியினை விதைத்தாலும
தன்குணத்தைப் பொருந்தக்காட்டும், சொற்பேதை யரு
க்கறிவிங் கினிதாகவருமெனவே சொல்லினாலும், நற்போ
தமவாராதங் கவர்குணமே மேலாகநடக்குந் தானே.

(இ-ள்.) கற்பூரத்தால் வரப்புகளிட்டுக் கஸ்தூரியையே எருவாகத்தூவி, வாசனைநீரையே பாயச்சி, அழகுணடாக, உள்ளியை அதில் நட்டுவைத்தாலும், அதின் குணத்தையே செய்வையாய்க் காண்பிக்கும். சொல்லத்தக்க அறிவிலாதவர்க்கு இனிமையான அறிவுவருமென்று எவ்வளவு சொன்னாலும, நல்ல குணமானது சற்றும் வராது. அப்போதும அவர்கள் தீயகுணத்தையே மேலாககாட்டுவர். எ - று. (அஅ)

## கண்ணயப் புரைத்தல்

தண்டுலாவிய தாமரைப்பொய்கையில்
மொண்டுநீர் முகத்தருகேகுதினள்
கெண்டைகெண்டையென் றக்கரையேறினள்
கெண்கெண்டைகாண்கிலள நின்றுதயங்கினள்.

(இ-ள்.) கொடிகளமைந்த தாமரைத்தடாகத்திலுள்ள த
ண்ணீரைக்கையால முகந்து ஒருமங்கை தனமுகத்தினருகே,
யேந்திப்பார்த்தாள், (அதனுட்டெரிந்த) கண்ணிழலைப் பார்த்து
கெண்டை கெண்டை, யென்று கூவிக்கொண்டே கரையி
லேறிப்பார்த்தபொழுது அக்கெண்டைமீனைக்காணாமல் தின
றுமயங்கினள். எ-று. (௯)

மருவுசந்தனக்குழம்பு பக்ஷணையுடன் பலபெறவ
ரைத்தாலுஞ், சருவசங்கிதக மனமுள மாதரைத் தழுவ
லுமாகாதே, பருவரைகள்போற பலபலநவமணியணி பைம்
பொனீந்தாலும். செருவமிஞ்சிய மானிடர் தோழ
மைகிட்டலுமாகாதே

(இ-ள்.) பொருந்திய சந்தனக்குழம்பு முதலிய வாசனைத்
திரவியங்களையும், பலவித சுவையுணவுகளையும், அழகுபெற
சேகரித்துத் தந்தாலும், எதிலுஞ்சந்தேகாஸ்பத முண்டாக நட
க்கும் மாதர்களையிணைதல்தகாது. மலையளவாகிய அநேக நவரத்
தினங்கள் அழுத்திய பசியபொன்னாபரணங்களைக் கொடுத்தா
லும், செருவமிகுதியுள்ள மனிதர்களின் சிநேகம் எவ்வளவும்
கொள்ளுதல் கூடாது எ-று. (௧0)

## தலைவிவனப்புரைத்தல்.

நிலத்தலைநீரின்முழுகி நின்றவடன்னைநேரோ
குலத்தலைமஞ்ஞைநாணிக் கூவெனக்கானிலேக
முலைத்தலையதனைக்கண்டு மும்மதக்கரிவந்துற்ற
தலைத்தலைசிங்கமென்றக் களிறுநண்ணிடேற்றம்மா.

(இ-ள்.) பூமியினிடத்து ஜலத்தில முழுகிநின்ற ஒரு மங்
கையை, கூட்டமாயிருந்த மயில்களதேரோபாராதது, அவள் சா
யலுக்குபபயந்து கூவெனறலறி, ஓர் சோலையிற்புகுந்தது. அவ
ள்முலைச்சிகரத்தைக்கண்டு மும்மதங்களைப் பொழியாநின்ற யா
னைகள் தங்களின்மேலோடிவந்து அவளிடையாகிய சிங்கத
தைக்கண்டுப்பயந்து ஓடிப்போயிற்று. எ-று. (௧௧)

## அற்பசந்தோஷிகளின் இயல்பைப் பற்றிக்கூறியது.

கரியொருதிங்களாறு கானவன்மூன்றுநாளும்
இருதலைப்புற்றில்நாக மின்றுணுமிரையீதென்று
விரிதலைவேடன்கையில் விற்குதைநரம்பைக்கவ்வி
நரியனூர்பட்டபாடு நாளையேபடுவாமந்தோ

(இ-ள்) ஒரு வேடன் யானையின்மீது பாணப்பிரயோகம் பண்ணித் தானொரு நாகத்தாற்கடியுண்டு, அந்நாகத்தின் மீதே விழுந்து யானையுந் தானும், நாகமும், இறந்துகிடக்கக் கண்ட (ஒரு நரி) யானையோ! ஆறுமாதத்துணவாகும். வேடனோ! மூன்றுநாட் பொழுதுபோகும், புற்றுநாகமோ! இன்றுணவும் இரையாகும், என்று சந்தோஷித்துக்கொண்டே விரிந்ததலையையுடைய வேடனது கையிலுள்ள வில்லின் குதைநரம்பைக் கடித்தமாத்திரத்தில், அது அறுந்து அதனால் அந்நரி இறந்தது. அதுபோலவே அற்பசந்தோஷிகள் வீணாசைகொண்டு துன்பப்படுவார்கள். எ-று. (கஉ)

பூதலத்தின் மானிடராய்ப் பிறப்பதரிதெனப் புகலவர் பிறந்தோர்தாமும், ஆதிமறை நூலின்முறை யருள்கீர்த்தி யாந்தலங்க ளனைத்துஞ்சென்று, நீதிவழுவா தவழக்குரைத்து நல்லோர் நேசங்கொண்டு, காதவழிபேரில்லார் கழுதையெனப் பாரிலுள்ளோர் கருதுவாரே.

(இ-ள்.) உலகத்தில் மானிடராய்ப் பிறப்பதரிதெனச்சொல்வார்கள். அப்படிப்பிறந்தாலும் முதன்மையான வேதசாஸ்திரங்களின் முறைப்படி, கிருபை - புகழ், இவற்றையுடையவராய் ஸ்தலயாத்திரைசெய்து நியாயந்தவறாதபடி வழக்குகள் தீர்த்து, பெரியோர்களுக்கு வழிபாடுசெய்து, நல்லவர்களென்று காதவழிதூரமேனும் பேர்பெற்று இராதவர்களைக் கழுதைப் பிறப்பென்றே யாவருமிகழுவார்கள். எ-று. (கங)

ஆரம்பூண்ட மணிமார்பா அயோத்திக்கரசே யண்
ணலே கேள், ஈரமிருக்க மரமிருக்க இலைகளுதிர்ந்தவாறேது,
வாரங்கொண்டு வழக்குரைத்து மண்மேனின்று வலியே
சி, ஓரஞ்சொன்ன குடியதுபோ லுதிர்ந்துகிடக்குந் தம்
பியரே.

(இ-ள்.) மாலையணிந்த அழகிய மார்பையுடைய அயோத்
தியாபுரியையாளும் மகாராஜனாகிய அண்ணலே கேட்பாயாக.
ஈரமிருக்க மரமிருக்க அதின் இலைகள்மட்டும் உதிர்ந்துபோன
காரணமெ யாதென்று தம்பியானவன கேட்க, அதற்கு அவன் பூ
மிமேலிருந்து பட்சபாதமாய்த்தனது வல்லமையினால் வழக்கு
நதீரத்து ஒருவருக்கீனசெய்பவர் குடிபோலஉதிர்ந்து கிடக்கின்
றது தம்பியென்றுரைத்தான். எ - று. (கச)

## அறுசீரடி யாசிரிய விருத்தம்.

வலிபுலி தனைக்கண்டஞ்சி மரந்தனிலேறும் வேட
ன், கொலைபுலி பசியைத்தீர்க்கதி ரட்சித்த குரங்கைக்கொ
ன்றான், நல்லவன் றனக்குச்செய்த நலமது மிக்கதாகும்,
புல்லர்கடமக்குச்செய்தா லுயிர்தனைப் போக்குவாரே.

(இ-ள்.) புலியைக்கண்டு பயந்து ஓர் விருக்ஷத்திலேறியி
ருந்த வேடனுக்கு உயிர்நீங்கத்தக்க மிகுந்த பசியைத்தீர்த்து ர
ட்சித்த குரங்கை அவ்வேடனேகொன்றான். (ஆதலால்) நல்
லோருக்குச்செய்த உதவிமிகுதியான நன்மையையேதரும். அ
ற்பர்களுக்கு செய்தவுதவி செய்தவனுக்கே மிகுந்த அபாயம்
உண்டாக்கும். எ - று. (கரு)

இக்கதை கபோதவாக்கியத்தி லுள்ளது.

தன்மானங் குலமானந் தன்னைவந்தடைந்த வுயிர்த
ங்கண்மானம், என்மானமாகிலென்ன வெல்லவருஞ்சரியெ
னவே யெண்ணம்போந்து, நன்மானம் வைத்தொருநாளு
மவர் தங்களுக்கு நன்மைசெய்வோர், மன்மானியடைந்
தோரைக் காக்கின்ற வள்ளலென்ன வழுத்தலாமே.

(இ-ள்.) தான் பிறந்த ஜாதியபிமானம், தன்னிடம்வந்து அடைந்தவர்களுடைய உயிர்போன்றமானம், முதலியவைகளை யும, தன்னுடையமானத்துக்ுச் சமானமாகக்க நதி நல்ல அபி மானம்வைத்து எந்தக்காலத்திலும், நனமை செய்யத்தக்கவர்க ள்யாரோ? அவர்களையே! பொருந்திய மானுபிமானமுள்ளவ ர்கள், அபயமென்றடைந்தவர்களை இரட்சிக்கததக்க வள்ளல் களென்று சொல்லுவார்கள். எ - று. (கூசு)

தன்னைத்தான புகழ்வோருந் தன்குலமேபெரிதென வே தான்சொல்வோரும், பொன்னைத்தான் றேடியறம் புரியாம லவைகாததுப் பொன்றினோரு, மினனைப்போ ன்மனையாளை வீட்டில்வைத்து வேசைசுகம் விரும்புவோ ரும், அன்னைபிதாபாவலரைப பகைப்பாரு மறிவிலலாக் கசடராமே.

(இ-ள்.) தன்னையே புகழ்கின்றவாகளும், தன்ஜாதியை யே பெரிதென றுரைப்பவாகளும், பொருளைததேடி தருமஞ் செய்யாமல் புதைத்துவைத் திறப்பவாகளும், மின்னலைப்போ லும் (தேககாந்தியுடைய) மனைவியை வீட்டில்வைத்துப பரத் தையர் போகத்தை இச்சிககின்றவாகளும், தாய் தந்தை வித் வான்கள் முதலியோரை விரோதித்துக் கொல்பவர்களுமாகிய விவாகள், புததியில்லாத கீழ்மக்களாவார்கள். எ - று. (கூஎ)

பெண்டுகள் சொறகேட்கின்ற பேயனொனுங குண மூடப பேடிகளாபர், முண்டைகளுக் கிணையிலலா மு னைவீரர் புருடரென மொழியொணுதே, உண்டுலக முதி ர்ப்பாருள் கீர்ததியற மின்னதென்று முணர்வேயிலலார், அண்டினவர் தமைக்கெடுப்பா ரழிவழக்கிக சொலவுதவ ரறிவுதானே.

இ-ள் மங்கையர் சொற்களைக்கேட்கின்ற பேயர்களாகி ய குணங்கெட்ட பேடியனைய உலோபிகளும, விதவைகளுக் கும, ஒப்புரைக்கக்கூடாத சத்தவீரர்களுமாகிய விவாகளையும் ஆண்டன்மை யுடையவரெனச் சொலலக்கூடாது. உலகத்திற் பிறந்தவர்களுள், புகழும் - தருமமும், இன்னதென்று ஆராய்

ந்து அறியாதவர்களே அடுத்தவர்களைக் கெடுப்பவராவார், நியாயத்தைவிட்டு நியாயவிரோதமாகப் பேசுவதே அவர்கள் புத்தியாகும். எ - று. (௧௮)

பொல்லாக்குணக் கல்விவரில் கொர்வமுண்டாம் மகமேறுடுமொருங்கு சேர்ந்தால், சொல்லாதுஞ் சொல்லுவிக்குஞ் சொற்சென்றாற் குடிகெடுக்கத் துணிவார்கண்டாய், நல்லோர்க்கிம் மூன்றுமுண்டாகிலருளதிக ஞானமுண்டாம், எல்லோர்க்கு முபகாரராயிருந்து பரகதியையெய்துவாரே.

(இ-ள்.) துர்க்குணமுடையவர்களுக்குக் கல்வியுண்டாகில் கருவம் அதிகப்படும். அக்கல்வியோடு செல்வமுங் கூடினால் சொல்லத்தகாத வார்த்தைகளையுஞ் சொல்லும்படிசெய்யும். தன்சொல் எங்குஞ்செல்லத்தக்கதாயிருந்தால், குடிகளைக்கெடுக்கவுந் துணிவார்கள். நற்குணமுடையார்க்குக்கல்வி, செல்வம், சொற்செல்லுதல், ஆகியஇந்தமூன்று முண்டாகில் அருளும் ஞானமும்பெற்று யாவருக்கும் உபகாரிகளாக இருந்து முத்தியடைவார்கள். எ - று. (௧௯)

## தலைவி நலங்கூறல்.

உந்தியின் சுழியின்கீழ்ச் செறுரோமமாங் கரியநாகஞ்
சந்திரனெனவே யெண்ணித் தையலாள் முகத்தைநோக்க
மந்திர கிரிகளாகிய வழிமறித்திடுதல்கண்டு [க
சிந்துரக் கயற்கணோடிச் செவிதனைக் குறைத்ததம்மா.

(இ-ள்.) உந்திச்சுழியாகிய நாபிக்கடுத்துள்ள உரோமமாகிய கரியநாகமானது (எனது தலைவியின்) வதனத்தைச் சந்திரனென்று கருதிமேல்நோக்க, முலைகளாகிய மந்தரமலைகளிருங்கி வழியைத்தடுத்துக் கொள்ளுதலைப்பார்த்து, செவ்வரிபரந்த கயலைப்போலுங் கண்கள் ஓடி செவிகளுக்குச் சொல்லியது.

## இதுவுமது.

மாகமாமேடைமீதில் மங்கைநின்றுலாவக்கண்டு, வெண்மாமதியென்றெண்ணி யிராகுவந்துற்றபோது, பாகு

சேர்மொழியினாளும் பகற்பொழுதிலாங்கந், தோகை
மாமயிலென்றெண்ணித் தொடர்ந்தராமீண்டனரே.

(இ-ள்.) வானமளாவிய மேடைமீதில (எனது தலைவி யான) மங்கைப்பருவமுடையவளை நின்று உலாவுகையில ஓடப் பற்ற பூரணச்சந்திரனென்று நினைத்து (நவக்கிரகத்திலொன்று கிய) இராகுவென்னுங் கரும்பாம்பானது வந்து நெருங்கிய பா லைபோலும மொழியையுடையாள் மனம்பதறித் தனதுபாதங்க ளைக்கொண்டு நடக்கையில (அவள் சாயலைக்கண்டு) தோகைகளையு டைய மயிலென எண்ணி அப்பாம்பு திரும்பிவிட்டது எ-று.

சலதாரை விழுநீருஞ் சாகரத்தின்னீசை சார்ந்தாற்,
றலமென்றே கொள்வதல்லாற் குறைகடல் வெறுப்பது
ண்டோ, புலவர்கள் சபையிற்கூடிப் புன்கவியானது சார்ந்
தால், நலமென்றே கொள்வதல்லா லவரிவரோ பெரி
யோர்குற்றம்.

(இ-ள்.) சலதாரையில் ஒழுகும் நாற்றமுள்ள தண்ணீரு ம், சமுத்திரத்திற்புகுந்தால், அதைத்தண்ணீரென்று ஏற்றுக் கொள்ளுமல்லாமல வெறுத்துத் தள்ளுவதுண்டோ? இல்லை. (அதுபோல) பெரியவித்துவான்கள் சபையில (சிறிய நூற் கேள்வியில்லாத) அற்பகவிஞர்கள்வந்து சேர்ந்தாலும், கற்றவர் களென்று ஏற்றுக்கொள்ளுவரல்லாற் குற்றஞ்சொல்லார்கள்.

காரொனுங்குழல் கடப்பிக் கடுஞ்சிலை வாளிசாயப்பி
மமொன வளர்ந்தின்ற வேழத்தின் கோடிசாயப்பித்
தாருறு கரியரோமச் சங்கிலிவழியே சென்று
சிறியனைவளர்த்த செவ்வனைக் குவிறகைகளைகாசான்.

(இ-ள்) கூந்தலாகிய மேகத்துக்கும (புருவமாகிய) வில் லம்புகளுக்கும், மகாமேருபோன்ற முலைகளாகிய யானைத்தந்த ங்களுக்கும், தவறி உரோமமாகிய சங்கிலியின வழியேசென்று

மேன்மையாய்வளர்ந்த செல்வத்தையுடைய எனது நாயகனானவன் அலகுலாகிய (பாயப்பட்ட) திற்காங்களைச் செலுத்தினான். எ - று. (க0ரு)

உண்டதை யொழிக்கும் வாசலோரகீ ரொழிக்கு மேலே, வண்டலு மழுக்குஞ்சேரு முதிரமு மாறுவாசல், உண்டதனிருப்பைகண்டு பெருங்களி யுள்ளங்கொண்டு, கண்டனரினைருரெல்லாங் கதியெனக் கருதுவாரே.

(இ-ள்.) உண்ட உணவுகளை (ஜீரணிக்கச்செய்து) வெளியிற்றள்ளுமமுதலாயலையடுத்து உவர்நீரொழுக்கிச் சேறனையவழுக்குந்திரண்ட இரத்தம மாறுசவாசல ஒன்றுண்டு. அதனிருப்பைப்பார்த்துப் பெருத்த சந்தோஷத்தை மனதிற்கொண்டு வாலிபர்கள் இதுவேமோட்சமென்று கருதுகின்றார்கள். எ-று.

கரந்தொருவன் கணைதொடுக்க மேற்பறக்கும சாளி காத்துக்கண்டே, உரந்து சிறுகானகத்தி லுயிர்ப்புறு பேடுகனக் குரைக்குங்காலு, விரைந்து விடந்தீண்டவுயிர் விடுமவேடன் கணையால்வல் லூறும்வீழ்ந்த, தரன்செயலே யாவதல்லாற் றன்செயலா லாவதுண்டோ வறிவுள்ளோரே.

(இ-ள்) ஒரு காட்டில் ஒளிந்திருந்து வலியகணைதொடுக்கும் வேடனைகண்டு பயந்துபறந்த புறாக்களிரண்டில் ஆணபுறவானது பெட்டைப்புறாவைப்பார்த்து, நமமைப பக்ஷிக்கக்கருதி பூமியில வேடனிருக்கின்றான். ஆகாயத்தில இராஜாளிப்பட்சி பறக்கின்றது. யாது செய்வோமென்று விசனபபட, அந்த சமையத்தில அவ்வேடனை புதரிலிருந்த பாம்புகடித்துஅதனாலவன் இறக்க, அவன் கையிலலிலிருந்த அம்பு விடுபட்டு மேறபறந்த இராஜாளியைக்கொன்று வீழ்த்தியதென்றால், எலலாம கடவுள செயலாலாவதல்லால், தன் செயலாலொன்றுமாவதில்லை. எ - று. (க0௬)

† கொல்லுலை வேற்கயற்கண் கொவ்வையங் கனிவா ய்மாதே, நல்லணி மெய்யிற்பூண்டு நாசிகா பரணமீதிற், சொல்லரிற் குன்றிதேடிச் சூடியதெனனோ வென்றான், மெல்லியல் கண்ணுமவாயும் புதைத்தனள் வெண்முத்தெ ன்றாள்.

(இ-ள்.) கொல்லனுலையிற்காச்சிக் கூராமைசெய்த வேலா யுதமும், கெண்டைமீனையுமொத்த கணகளும, கொவவைபப ழம்போன்ற செவந்தவாயினையுமுள்ள பெணணே ? நலல ஆ பரணங்களை தேகத்திலணிந்து நாசியிணுபரணத்தில் குற்றம பொருந்திய குன்றிமணியைபபுனைந்தது யாதுகாரணம ? என் ன, அம்மேன்மையையுடையவள் (வெட்கித்தனது) கணணையு ம் செவ்வாயையும் மூடிககொணடு வெளளை முத்தெனறு சொ ன்னாள். எ - று (௪௰௬)

## தலைவன் கூற்று.

கலி நிலைத்துறை

அருகிலிவளருகிலிவ ளருகிலவரவுருகும்
கரியகுழன்மேனியிவள் கானமயிலசாயல
பெரியகனமிடைசிறிது பேதையிவளேயோ
தெருவிலிவணினறநிலை தெயவமெனலாமே

(இ-ள்.) கறுப்புநிறம் பொருந்திய கூந்தலையும, அழகிய மேனியையும், கானமயிலைப்போலுஞ் சாயலையும, பருத்தமுலை களையும், சிறுத்தவிடையினையுமுள்ள பெணணானவள, பககத் தில்வர, மனமானதுருகும. ஐயோ ! வீதியில் இவள நிற்கும நிலையைநோக்கில தெய்வப்பெணணெனறே மயங்கிச்சொலலு தல வேண்டும. எ - று. (௪௰௭)

## பாங்கிகூற்று.

அலகுவாள்விழி யாயிழைநன்னுதற் றி
றிலகங்கணடெதிர் செஞநிலைமாரனும
கலகமேசெயுங கண்ணிதுவாமென
மலரம்பைநதையும வைததுவணஙகினான்.

(இ-ள்) வாளாயுதத்தை யொத்தகண்ணுடைய (எங்கள்) கன்னியினது நல்ல நெற்றியிலுள்ள பொட்டினழகை, செவ்வி யவில்லையுடைய மன்மதன் கண்டு, கலகம்விளைக்கும், கண்ணே யென்று நினைத்து தன்மலரம்புகளைந்தையும (அவன் முன்) வைத்து வணங்கினான். எ-று. (௧0௮)

குரங்கு நின்றுகூத் தாடியகோலத் தைக்கண்டே
அரங்கு முன்புநாய் பாடிக்கொண் டாடியவதுபோல
கரங்க ணீட்டியே பேசியகசடரைக்கண்டு
சிரங்க ளாட்டியே மெச்சிடு மறிவிலார் செய்கை.

(இ-ள்.) குரங்கு கூத்தாடிநின்ற அழகைப்பார்த்து, ஒரு நாய், தானும் அவ்வாறுகூத்தாடக்கருதி ஊளைப்பாட்டுடன் வீதியில ஆடியதுபோல, கைகளைநீட்டிப்பேசும் மூடர்களைக்கண்டு மெச்சித் தலைகளையாட்டித் தங்களைத்தாங்களே மெச்சிக்கொள்வது அறிவில்லாதொழில். எ-று. (௧0௯)

## அறுசீரடி யாசிரிய விருத்தம்

வில்லது வளைந்ததென்றும வேழம துறங்கிற்றென்றும, வல்லியம பதுங்கிற்றென்றும வளர்க்கடா பின்னிற்றென்றும, புல்லர்தஞ் சொல்லுக்கஞ்சி பொறுத்தனர் பெரியோரென்றும், நல்லதென நினைக்க வேண்டாம் நஞ்செனக்கருதலாமே

(இ-ள்.) வில்வளைந்து கொடுத்தல், யானை நித்திரைசெய்தல், புலிபதுங்குதல், நாய்பின்வாங்குதல், கீழ்மக்கள் சொல்லுக்குப்பயந்து பெரியோர் பொறுமையோடிருத்தல், இவைகள் யாவையும் நன்மையென்று நினைக்கக்கூடாது. விஷமென்றே சிந்திக்கவேண்டும். எ-று. (௧௧0)

சலங்களிற் கிடக்குமாமை சலத்தைவிட் டகன்றபோது, கொலைபுரி வேடன் கண்டு கூரயிற்கொண்டு செல்ல, வலுவினு லவனைவெல்ல வகையொன்று மில்லையென்றே, கலையெலி காகஞ்செய்த கதையெனவிளம்புவோமே.

தேயாற்றில், புதுமையா யெடுக்கபோது பெட்டியிற் பு
லியாயாலே, அதிருடன கடியுண்டனறே யருநரகடைந்
தானமாமேதா.

(இ-ள்.) விவேகமற்ற வோர்பிராமணன் தனனிடத்துக்
கல்வி பயின்றுவந்த இராஜகுமாரத்தியின மீது வியாமோகங
கொண்டு, அவள புஷ்பவதியானகாலம மிகவுந் தோஷமுடை
யதென்றும, உடனே அவளைபபெட்டியு ளடக்கஞசெயது நதி
முதலிய நீரோட்டஙகளில விட்டுவிடவேணடுமென்றும அவள
தந்தையாகிய அரசனுக்குததெரிவிதது, அவவாறே செயவித
துப, பினபு தான அந்தபபெட்டியைத தேடிககொணடு ஆற
றோரமாகச சென்றோரிடத்தி லபபெட்டியைககணடு அதை
யெடுத்தாசையுடனே திறகக, அதறகு முனனமே, வேட்டை
யாடிவந்த வேறொரு அரசன அபபெட்டியைப்பார்த் தெடுத்
துத்திறந்து, அதறகுள்ளிருநத கனனிகையை யழைத்துக்கொ
ணடு வேட்டையிலகப்பட்ட புலியை யதிற்போட்டுப பூட்டிப்
பழையபடி யாற்றில விட்டுவிட்டானாதலால, அப்பெட்டிக்கு
ள்இருநதபுலி யபபிராமணனையடித்துககொலல, அதனால இற
ந்து நரகத்தையடைந்தான். எ - று. (௧௧௫)

மையது வல்லியமவாழ் மலைக்குகை தனிறபுகுநதே
ஐயமும புலிக்குக்காட்டி யடவியிற றுரத்துஙகாலை
பையவே நரிநகோளாலே படுபொருளுணரபபட்ட
வெய்யவம் மிருகநதானே கொன்றிட வீழ்நதகனறே.

(இ-ள்) ஓராட்டுக்கிடாவானது புலியிருக்குமபடியானஒரு
குகைககுட்புகுந்து அப்புலியை ஒருவிதமாய் மிரட்டிச் சநதே
கத்தைககாட்டிக் காட்டினவழியாய விரட்டுகிறகாலத்தில், எ
திரில்வந்த ஒரு நரியின்கோளால அபபுலியானது உணமையை
த தெரிந்துகொணடு அவ்வாட்டின்மேல பாயந்துகொல்ல ஆட
டுககிடாயிறநதது. எ - று. (௧௧௬)

மங்கைகைகை சொற்கேட்டு மன்னாபுகழ் தசரத
னும் மரணமானான, செங்கைமலைச் சீதைசொலலால

சீராமன் கேட்டவுடன் சென்றான்மான்பின், தங்கையவள்
சொற்கேட்ட ராவணனுங் கிளைசேயார் தானுமாண்டான்,
தங்கையாசொற் கேட்பதெல்லாங் கேடுவரும் பேருல
கோர் நகைப்பர்காமே

(இ-ள்.) அரசர் புகழும் தசரதன, கைகேசியென்னும
மனைவியின சொறகேட்டு மரணமடைநதான ஸ்ரீராமபிரான
ஜானகிசொற்கேட்டு மானின்பின்சென்று வருந்தினன். இராவ
ணன தன் தங்கையாகிய சூர்ப்பணகையின சொற்கேட்டுத தன
சுற்றத்தோடு மாண்டான. ஆதலால் ஸதிரீகள சொறகேட்ப
தெல்லாம துன்பத்திறகே யிடமாகும உலகத்தாரும, நகைப்
பார்கள். எ-று. (கக௭)

அதிகாரிருவர்நட்புக் கவமதிப்புநினைவார்களோர்
ஒதிநெறிபடச்செடறு துணைபிரிந்திடுவதென்றால்
மேவியன்பலவாயில் வேசைதாய்பச்சைநாவி
பூதியனைப்போலாகி யுழன்றுநைய்துவாரே.

(இ-ள்.) முதலில ஒற்றுமையான சிநேகத்தைக் கொண்
டிருந்த இருவருள், ஒருவனை, மற்றொருவா அவமதிக்கவேண்டு
மென்றெண்ணி, அதறகுரிய வஞ்சகங்கள் பலவாகச்செய்து,
அதனால பகைநேர்ந்து ஒருவனைவிட்டொருவா பிரிந்து, ஒரு
பாவியானவன, தன் மகனோடு இணைபிரியாது கூடிக்கூடலாவி
செய்த ஒரு பிராமணனுடைய குடத்தில பச்சைநாவியை வைத்
து ஆதியசைதையை யொப்பாகும் எ-று (கக௮)

இக்கதை சிந்தாமணியிலுள்ளது.

அருமையும பெருமைகாணு மரிக்குடன் பிவர்
தம்பால், இருமையு மொருமையாகு மின்புறக்கேதுவு
ண்டாம, பரிவினாச் சகுனிபோலப் பண்புகெட்டவாகு
டம்பால், ஒருமையினி ரயமெய்து மேதுவே யுமரும
ன்றே.

கெடு மறையோர்மன்னர் வணிகர்நல்லுழவோ ரொன்றும்,
குலங்கெடு வேசைமாதர் குணங்களை விரும்பினோர்க்கே.

(இ-ள்.) சாதகுணத்தையுடைய வேதியர், அரசர், வைசியர், உழவினர் எனனும ஜாதிகளினுயாவைக் கெடுக்கத்தக்க, பரதனையரை இச்சித்தவர்களுக்கு தருமங்கெடும், செலவம் குறையும், உயிரழியும், தேககாந்தியுமாறும், புத்தியுங்கெட்டு நீண்ட நரகத்தையடைவார்கள். எ - று. (௧௨௨)

இரண்டு சகோதரிகள் தங்களிடங் கலந்த
இரண்டுதலைவர்களைப் பற்றிக்கூறியது.
கட்டளைக்கலித்துறை.

அரவிந்தநண்பன் சுதன்றம்பி மைத்துனன் அண்ணன் கையில், வரமுந்தியாயுதம் பூண்டவன் காணுமற் றங்க லேனா, பரமனற்கிரியை யேந்திய மைந்தன் பகைவன் வெற்பை, பரமெனவெடுத்தவன் மாற்றானறன் சேவக னென்னடியே

(இ-ள்.) தங்காய? என் வீட்டிற்குவந்தவன். தாமரைக்கு சிநேகனாகிய சூரியன், அவன்புத்திரன் கர்னன், அவன்தம்பி யருச்சுனன், அவ்வருச்சுனன் மைத்துனன், கிருஷ்ணன். அக்கிருஷ்ணன் தமையன் பலராமன், அப்பலராமன் கையிலுள்ள ஆயுதம் கலப்பை, அக்கலப்பையைப் பூண்டிருப்பவனாகிய அருமைக்கடாவென்றறிவாயாக, வென்றுசொல்லி, உன் வீட்டிற்குவந்தவன் யாரென்றுகேட்க, தமக்காய்? சிவபெருமான் வசிக்கும் கயிலைமலையையெடுத்த விராவணன், அவ்விராவணனுக்குப பகைவனாகிய ஸ்ரீராமபிரானுக்கும் தாசத்துவம் பூண்டவனும், அவ்விராவணனோடு பகைத்து எதிர்த்தவனும், பாவதங்களையெல்லாம் இலேசாகப் பெயர்த்தெடுத்தவனுமாகிய ஆஞ்சனேயன், எனவே குரங்கென்றறிவாயாக. (எ - று)

இரண்டு கண்பர்கள் தாங்கள் கலவிசெய்த
மங்கையர்க ளியல்பைக்கூறியது

சங்கரன்றேவிதமையன் மனைவிதனக்குமுன்னும்
மங்கையரோறியவாகனங் காணுமற்றஙகவளோ
கொங்கைகளீரைந்துடைய வளாயிக்குவலயத்தில
எங்குமதிரியுமவயிரவருர்தி பெணறேங்கினையே

(இ-ள்) ஒருவன் மற்றவனைப்பார்த்து கண்பனே! நீகலந்த மங்கை எந்தனமையனென சிவபெருமானுக்கு நாயகியாகிய பாரவதி, அப்பாரவதியின் தமையன், விஷ்ணு அவ்விஷ்ணுவின் மனைவி, இலக்குமி, அவளிலக்குமிக்கு முனபிறந்தவள் மூதேவி, அம்மூதேவியானவளேறிய வாகனமாகும, எனவே கழுதையெனறு கூற, அதைககேட்ட மற்றவன, நான கலந்த மங்கையோவெனில, வயிரவக்கடவுளின வாகனமாயும, பத்துமுலைகளை யுடையனவாயும், ஊரெங்குந்திரிகிற நாயென்றறிவாயாக எ - று. (௧௨௪)

இந்திரன்பதங்கள்குன்று மிறையவாபதங்கணமாறு
மந்தரநிலைகள்பேற மறுகபலவறுமையாகும
சந்திரன்கதிரோன்சாயுந் தரணியிறமேயமாளும
அந்தணாகருமங்குன்றில யாவரோவாழுவாமனணில்

(இ-ள்.) வேதியாகள் தாஙகள செய்யததக்க கிரியைகளை செய்யாதொழிந்தால இந்திரனது செலவஙகளும், குறையும். இராஜர்கள வாழக்கையும மாறும். மந்தரமலையினது நிலைகளும் பெயருமம். எவ்விடஙகளினும வறுமை மிகுதியாம. சந்திர சூரியாகளும நிலைகெடுவாாகள். பூவுலகமெலலாம் பொலிவழிந்து நிற்கும். உலகில வாழததககவாயார். எ - று. (௧௨௫)

தலைவி கூற்று.

என்னனைக்கன்று முத்தனைக்குனிக்கு மிறையனைய
னைக்குமேயனறு, மனனனைதகன்றிப் பினனனைக்குதவா

(இ-ள்.) யானை உருவமனமைந்த கணபதி பெருச்சாளியி லேறியும், கல்வியான்கள் சூழ்ந்து துதிக்க முருகக்கடவுள் மயி லிலேறியும், சூல்கொண்ட மேகங்கள் படர்ந்து மழைபொழி கின்ற பருவதத்திலுற்பவித்த உமாதேவி அன்னப்பட்சியிலேறி யும், சமபுநந்தியிலேறியும் நம்மிடத்தேவந்தார்கள் எ - று. ()

மிகுபொன்மை=பெருச்சாளி. எரியொன்று செலவன் முருகன். துலாஸ்நானக்கட்டம், மாயூரம்=மயில் நாகமினா= வளையுமை. சோறு=அன்னம். சொந்தக்கனல்=நந்தி, (நந்தி.)

ஒருபாதி மாலகொள மற்றொருபாதி யுமையவன் கொண்டான், டிருபாதி யாலுமிறந்தான புராரியிருக்கிறதியோ, பெருவாரிதியிற் பிறைவானிற் சாப்பம் பில்த்திறகற்ப, தருவானபோஜ கொடையுன்கை யோடென் கைதந்த னனோ.

(இ-ள்.) ஒரு பாகத்தை விஷ்ணுகொள்ளவும், மற்றொரு பாகதமைத உமையவன்கொள்ளவும, ஆக இரண்டுபாகத்தாலும் திரிபுரசமமாரகாத்தனான சிவன இறந்துபோயினன், சந்திரன் வானத்திலும். ஆதிசேடன் பாதாளத்திலும் புகுந்தது. போஜ மகாராஜனே ? கறபக விருட்சம்போலும் கொடைதன்மை யை உனகையிலும கையிலேந்திய ஓட்டை எனகையிலுங கொடுததனன. எ - று. (கஙக)

கமபமதகடகளிறுறன் றிலைவாழுங் கணபதிதன பெருவயிற்றைக் கண்டுவாடி, யுமபொலாம் விழித்திருந் தா ரயிலவேற்சங்கை யுடையவறுமுகவனுங்கண்ணீராறு ஞன், பம்புசுடர்க்கண்ணனுமோ நஞ்சுண்டான்மால் பய மடைநதா னுமையுமுடல பாதியானன், அம்புவியைப்ப டைத்திடுவ தவமதேயென் றயனுமன்னமிறங்காம லலை கின்றானே.

(இ-ள்.) மும்மதங்களேர்ந்த கூடிய யானைமுகமுடையவ ராய்த் திருத்தில்லையில் அமரும் கணபதியினுடைய பெருத்த

வயிற்றைப் பார்த்துப் பயமடைந்து, தேவர்கள் இமையாதிருந்தார்கள். வேலாயுதத்தைக் கையிலே வைத்திருக்கின்ற ஆறுமுகன், கண்ணீர் ஆறானான். பொருந்திய அக்கினிக்கண்ணையுடைய சிவன் விடத்தையுண்டான், மகாவிஷ்ணு பயமடைந்தான், உமாதேவியும் தேகம் பாதியானாள், பிரமா உலகத்தைப் படைத்திடுதல் வீண் என்று அன்னமிறங்காமல் அலைந்தான். எ - று. ()

இமையாதிருத்தல்=கண்ணிமையா திருத்தல். ஈராறு=பனிரண்டு. பயம்=ஜலம். அன்னம்=ஓதிமம். இவைகள் இயற்கையாயுள்ளதை வியந்து புதுமையாகக் கூறியிருக்கின்றார்.

காமமே குலத்தினையு நலத்தினையுங் கெடுக்கவந்த களங்கம், காமமே தரித்திரங்களனைத்தினையும் புகட்டிவைக்குங் கடாரங், காமமே பரகதிக்குச் செல்லாமல் வழியடைக்குங் கபாடங், காமமே யனைவரையும் பகையாக்கிக் கழுத்தரியுங் கத்திதானே

(இ-ள்.) (பெண்கள் மயக்கமாகிய) காமமே [illegible] குலநெறியையும், நன்மையையும் கெடுத்துவிடும்படியான குற்றம். வறுமைகளை நிறைத்துவைத்திருக்கும் பொக்கிஷம். முத்திமார்க்கத்திற் செல்லாமலடைத்திருக்குங் கதவு. அனைவரையும் பகையுண்டாக்கிக் கழுத்தறுக்கத்தக்க வாளாயுதமுமாம். எ - று. ()

கலிவிருத்தம்.

துடாரி தண்ணுமை பேரிகை சல்லரி டக்கை
கடாகமெங்கணு மதிர்ந்திட வொலித்திடக் காலை
விடாத நாணமுங் கன்னிய புருடனை விழைந்தே
அடாது செய்தமங் கையரவனை யொலித்தல் போலாமால்.

(இ-ள்.) பம்பை, மத்தளம், பேரிகை சல்லரி, இடக்கை, நகரா, முதலிய வாத்தியங்களதிர்ந்திடச் சப்தித்தலைப் பார்த்தலானது விடக்கூடாத வெட்கம் நீங்கி அன்னியநாயகர்களை இச்சித்துப் பொருந்தாத காரியத்தைச்செய்த பெண்களினது இயற்கைக்குணங்கள் சப்தித்தலைக்கேட்டது போலாம். எ - று. ()

